18th September 1961]

இந்த வேலைகளைச் செய்ய முன் வருவார்களா? சில இடங்களில் அந்த வேலைகள் நடைபெறவில்லை என்று தெரியவருகிறது. அந்த இடங்களிலெல்லாம் அப்படிப்பட்ட வேலைகள் நடைபெறுவதற்கு ஏதாவது திட்டம் இருக்கிறதா? அப்படிப்பட்ட திட்டம் இருந்தால் அது நடைமுறையில் இருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவைகளில்தான் விசேஷ கவனம் செலுத்தப்பட்டு வருகிறது என்று சொன்னேன். மனு வரவேண்டிய அவசியம் இல்லை என்றும் குறிப்பிட்டேன். எந்த இடங்களில் கான்சென்ட்ரேட் செய்யவேண்டுமோ அந்தந்த இடங்களில் கான்சென்ட்ரேட் செய்யப்பட்டு வருகிறது என்றும் சொன்னேன். சேலம் மாவட்டம், இன்னும் மற்ற இடங்களிலும் புட் ப்ரொட்க்ஷன் இலாகா அவற்றில் தீவிர கவனம் செலுத்திக் கொண்டுதான் வருகிறது. பல இடங்களில் குளங்களை அவர்களே சீர்படுத்திக்கொண்டு வருகிறார்கள்.

*Kulumur Odai Irrigation Scheme*

* 1570 Q.—SRI A. A. RASHEED (on behalf of SRI K. R. VISWANATHAN) : Will the Hon. the Minister for Home be pleased to state the present stage of the Kulumur Odai Irrigation Scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government await the report of the Board of Revenue (Food Production) on the revenue, financial, food production and administrative aspects of the scheme.

SRI S. RAMALINGA PADAYACHI : குழுமூர் ஓடைபாசன திட்டம் சுமார் 7, 8, 10 ஆண்டுகளுக்கு முன்னதாகவிருந்தே சீர்படுத்தப்படாமல் இருக்கிறது. முன்பு ஒரு தடவை இதைப்பற்றி திட்டம் கொண்டு வந்து அதற்கு என்று 75 ஆயிரம் ரூபாய் சாங்க்ஷன் செய்யப்பட்டிருந்தது. அதன் பிறகு அதை டெண்டருக்கு விடப்பட்டு ஒருவரும் கண்டிராக்ட் எடுக்க வராததால் அதற்கு தென்னார்காட்டிலிருந்து ரிவைஸ் எஸ்டிமேட் போட்டதில் ஏதோ ஆட்சேபணை வந்ததால் அது நின்றுபோய் விடக்கூடாது. சாங்க்ஷன் ஆனபிறகு ஆட்சேபணை வந்ததால் அது நின்றுபோக வேண்டிய காரணம் என்ன? அதற்கு கலெக்டர் என்ன சொல்லுகிறார்? கலெக்டர் என்ன சொன்னார் என்பதைப்பற்றி கனம் அமைச்சர் விளக்குவாரா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் சொன்னதுபோல் ஆட்சேபணை வந்திருக்கிறது. அதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதனால்தான் தாமதம் ஏற்படுகிறது. எந்த இடத்திலிருந்து ஆட்சேபணை வந்தாலும் அதைப்பற்றி பரிசீலிக்க வேண்டியதாக இருக்கிறது. அது முடிவான பிறகுதான் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது.